ஞான ஜோதி

# சாமா சாஸ்திரிகள்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

IMS 0019

2173

விலை அணா எட்டு




# பதிப்புரை

சாமா சாஸ்திரிகள் பரதேவியின் மகிமையைப் பாடிய பரம பக்தர்; அருளாவேச கீர்த்தனுச்சாரியார்; அரிய கானஜோதி; இசையின் வழி யாய் ஜீவன்முக்தி அடைந்தவர்.

அவரது வரலாற்றை அன்புடன் எழுதி உதவிய யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கட்கு, எங்கள் நன்றி உரியதாகுக.

அன்பு நிலயத்தார்.

இராமச்சந்திரபுரம்
1—12—1945

கூசா—க—தூ

## பொருளடக்கம்

கான ஜோதி

# சாமா சாஸ்திரிகள்

## சங்கீத வாணி

இராகம்: பைரவி] [ஆதி தாளம்

பல்லவி

"பங்காரு காமாக்ஷி பக்தன், மந்திர சித்தன்
பரதேவி மகிமையைப் பாடும் வரப்பிரசாதி—
சாமா சாஸ்திரி (பங்)

அநுபல்லவி

சங்கீத வாணியருள் பொங்கும் வித்யாதரன்
தான தஹன ஜதி ஸ்வர தாள நைபுண்யன் (பங்)

சரணம்

செல்வரை நாடாத செல்வன்; கந்தர்வச் சிங்கம்;
செருக்கரின் கருவத்தை நொறுக்கும் கலாதீரன்!
நல்லிசைப் புலவர்சொல் பல்லிசைப் புலவனும்,
நாத சிகர ஜோதி பரத சாஸ்திர நிதி (பங்)

— சுத்தானந்தம்.

## 1. பங்காரு காமாக்ஷி

தஞ்சாவூர் பங்காரு காமாக்ஷி (தங்கக் காமாக்ஷி) கோயில் புகழ்பெற்றது. சங்கீத வித்துவான்கள் அவசியம் அம்மனைத் தரிசித்து இசைமாலை சூட்டுவார்கள். இந்த அம்மன் அழகான தங்கச்சிலையாலானது; களையான முகப் பொலிவுடன் கூடியது. இதை முன்னே பிரம்மாவே செய்து காஞ்சிபுரத்தில் நாட்டி வழிபட்டாராம். ஆதி சங்கராச்சாரியார் இந்த அம்மன் பூசைக்காக வேதாகமங்களில் தேர்ச்சி பெற்ற ஒரு சாஸ்திரிகளை நியமித்தார். இவருடைய பரம்பரையே இன்றும் அதை ஆராதனை செய்துவருகிறது. இவர்கள் கம்பத்திலிருந்து வந்த வடதேச வடமர், ஆசார சீலர், சாஸ்திரக்ஞர், அம்பிகை உபாசகர்; காமாக்ஷி யருளே அவர்களுடைய குலதனம்.

1565–ஆம் ஆண்டில் விஜயநகரம் வீழ்ந்த பிறகு நாடெங்கும் கலகக்காடானது. துருக்கர் படைகள் ஊர்களைச் சாடி அதலகுதலப் படுத்தின. காஞ்சிபுரமும் இதோ போர்க்களமாகப் போகிறது! ஹம்பியின் அழகான சிலைகள் உடைபட்டதுபோல், காஞ்சியில் தெய்வச் சிலைகளும் பகைவர் சம்மட்டியால் தகர்ந்து போனால் என்ன செய்வது? ஆஸ்திகர்கள் தங்கள் உபாசனா மூர்த்திகளுடன் ஊரைவிட்டு ஓடினார்கள். பங்காரு காமாக்ஷி அர்ச்சகக் குடும்பமும் 1566-ல், காமாக்ஷியையும் சதுர்புஜ உத்ஸவ விக்ரகத்தையும் தூக்கிக்கொண்டு, ரொக்கம் நகைநட்டுகளைக் கோயில் நகராவுக்குள் போட்டு மறைத்து வைத்துக் கிளம்பியது. இக் குடும்பம், காடும் மலையுங் கடந்து, இருபத்துநான்கு ஆண்டுகள் அலைந்து, பல விபத்துக்களையும் பொறுமையாகத் தாண்டிச் செஞ்சிக்கு வந்தது! அங்கே ஆண்ட சந்தா மகாராஜா நல்ல ஆஸ்திக பக்தன்; அவன் காமாக்ஷி உபாசகர்களை வரவேற்று

பூசைக்கு வேண்டியதெல்லாம் தந்து பதினைந்தாண்டுகள் ஆதரித்தான். அவன் தந்த வெள்ளிச் சாமான்கள், இன்றும் கோயிலில் உள்ளன. 1624-ல் உடையார்பாளையம் ஜமீன்தார், அர்ச்சகர்களை வரவேற்று வேண்டிய ஆதரவளித்தார். எழுபது ஆண்டுகள் இப்படிக் காமாக்ஷி பூஜை தடையில்லாமல் நடந்து வந்தது. இங்கே அம்மன் இருந்த இடத்தில் இன்னும் காமாக்ஷியம்மன் மண்டபம் துலங்குகிறது. அர்ச்சகர்களிடையே மனத்தாங்கல் ஏற்பட்டது; அதற்குக் காரணம், உடையார்பாளையம் ஜமீன்தார். பூஜை உரிமையுள்ள அந்தக் குடும்பம், மிகவும் பெருகிவிட்டது. மூத்தவரின் மூத்தபிள்ளைக்கே பூஜையில் முதன்மை; மற்றவர்கள் முறைப்படி சமவுரிமை பெற்றனர். ஜமீன்தார் உரிமைக்காரரையே பாராட்டி, மற்றவர்களைக் கவனியா திருந்தார். அதனாலேதான் மற்றவர்கள் மனத்தாங்கலுற்றனர். அவர்களை ஆதரிக்க, ஆனக்குடி மிராசுதார் சாமிநாதபிள்ளை முன்வந்தார்; இவர், தஞ்சை மராடிய மன்னருக்குச் சிறந்த நண்பர்; பெரிய செல்வர், தருமவான், தெய்வ பக்தர், சங்கீத ரசிகர். இவர் தூண்டுதலால் மனத்தாங்கலுற்ற குடும்பம் காமாக்ஷியம்மனைத் தூக்கிக்கொண்டு, இரவில் ஆற்றைக் கடந்து, ஆனக்குடி வந்துவிட்டது. உடையார்பாளையம் ஜமீன்தார் தடுத்தும் மன்றாடியும் பலிக்கவில்லை. அவர் அங்கிருந்த உரிமைக்காரருக்குத் தருமாசனங்கள் தந்து ஆதரித்தார். அந்தப் பரம்பரை இன்னும் உடையார்பாளையத்தில் வளர்கிறது. அம்பாள் பூஜை குறைவின்றி நடந்து வந்தது; அதனால் குடும்பம் தழைத்தது!

## 2. வேங்கட சுப்பிரமணியன்

ஆனக்குடி, ஜமீன்தார் அர்ச்சகர்களைப் பதினைந்தாண்டுகள் ஆதரித்தார். பிறகு விஜயபுரம், நாகூர், சிக்கல்

முதலிய இடங்களில் தங்கி, அர்ச்சகக் கூட்டம், திருவாரூரில் நீண்டகாலம் வசித்தது. அப்போது அம்மன் பூஜை செய்துவந்தவர், வேங்கடாத்திரி ஐயர் என்பவர். அவருக்குப் பிறகு, விஸ்வநாத ஐயர் அர்ச்சகரானார். விசுவநாதர், காமாக்ஷி பக்தியிலே தோய்ந்தவர், வேதாகம நிபுணர், சோதிட வித்தகர்; அவர் மனைவியும் பரம பக்தை. அவருக்கு இருபத்தைந்து வயது; மனைவிக்கு இருபது வயது. அப்போது அந்தத் தெருவில் வேங்கடாசலபதி சமாராதனை நடந்தது. அதில் ஆவேச முற்ற ஒரு பெரியார் அந்த அம்மாளைப் பார்த்து, "அடுத்த வருஷம் சித்திரைக் கிருத்திகையில், சனிக்கிழமை, உனக்கு இரத்தினம்போல் ஒரு பிள்ளை பிறக்கும்; சமாராதனைக்கு ஏற்பாடு செய்!" என்று ஆவேசமாகச் சொன்னாராம்; அச்சொல் பலித்தது! கௌதம கோத்திரத்திற்கு மணியான ஒரு பிள்ளை, சித்திரபானு, (1763) சித்திரைக் கிருத்திகையில்பிறந்தது. வேங்கடரமணசுவாமி அருளால் முருகனுக்கு உவந்த கிருத்திகையில் பிறந்ததால், பிள்ளைக்குப் பெற்றோர், "வேங்கட சுப்பிரமணியன்" என்றே பெயரிட்டனர்; ஆனால், "சாமா கிருஷ்ணன்" என்ற செல்லப் பெயரால் அழைத்து வந்தனர். இந்தப் பிள்ளையே, நமது சாமா சாஸ்திரிகள். இட்ட பெயர் மறைந்தது; செல்லப் பெயரே அவர் கீர்த்தன முத்திரையானது!

## 3. தஞ்சாவூருக்கு வருதல்

சாமா சாஸ்திரிகள் தந்தையிடம் வடமொழியும் தெலுங்கும் கற்றார்; மாமாவிடம் கொஞ்சம் பாட்டுக் கற்றார். சாமாவுக்குப் பதினெட்டு வயதிருக்கும். 1781-ஆம் ஆண்டு ஐதராலியின் படையெடுப்பு வந்தது. "இதோ, திருவாரூருக்கு அவன் வரப்போகிறான்!" என்றதும்,

கோயில் அர்ச்சகர்களுக்குக் கிலி பிடித்தது. அழகான விக்ரகங்க ளெல்லாம் போய்விடுமே என்று பயந்து, எல்லோரும் தஞ்சாவூரில் அடைக்கலம் புகுந்தனர். சில விக்ரகங்கள் தஞ்சாவூர் இராஜகோபால சுவாமி கோயிலிலும் மற்றக் கோயில்களிலும் வந்து சேர்ந்தன. இன்னும் அங்கே அப்படி வந்த பல விக்ரகங்களைக் காணலாம். விஸ்வநாத சாஸ்திரியாரும், துளஜா ராஜாவின் அன்பைப் பெற்றுக் காமாக்ஷியுடன் தஞ்சாவூரில் வந்து குடியேறினர். சாமாவும் அன்றுமுதல் தஞ்சாவூர் வாசியானர். காமாக்ஷி, முதலில் பல கோயில்களில் வைக்கப்பட்டு, பிறகு தனிக்கோயில் கட்டிப் பிரதிஷ்டை செய்யப்பெற்றுள். அக் கோயிலுக்குத் தஞ்சை மன்னன், ஏராளமான காணிக்கைகளும், முப்பத்திரண்டு வேலி நிலம் சர்வ மான்யமும் அளித்தான். சாஸ்திரியார் குடும்பம் கவலையற்று இன்றும் காமாக்ஷியையே பூஜை செய்துவருகிறது!

## 4. இசைப் பயிற்சி

சாமா, பிறவிப் பாடகர்; நாதக் கலையில் அவருக்கு அளவற்ற ஆர்வம் இருந்தது. ஆனல் வீட்டாருக்கு அந்தக் கலம் சூன்யம். பாட்டுச் சொல்லித் தந்த மாமா கூட, "காரியத்தைப் பார்; சும்மா பாடிக்கொண்டிராதே" என்று எச்சரித்து வந்தார். ஒருநாள் காமாக்ஷியம்மனுக்கு, சாமா பூஜை செய்தார்; அர்ச்சனையின்போது இனிய குரலால் பல ராகங்களில் மந்திரஞ் சொல்லிப் புஷ்பாஞ்சலி செய்தார். இதைக்கேட்ட ஒரு செல்வர் மிக்க மகிழ்ச்சியடைந்து, சாமாவுக்கு ஒரு சால்வை பரிசளித்து, "இப்படியே சங்கீதத்தை வளர்!" என்ருர். சாமா மிகவும் பெருமையுடன் மாமாவிடம் ஓடி, "மாமா, இதோ என் சங்கீதத்திற்குச் சால்வை!" என்று காட்டினர். மாமா

முகம்வேறுபட்டது. மாமாவிற்குப் பொறுமைத்தி மூண்டு, மருமகனைக் கண்டபடி பேசி, "இனிப் பாட்டுக் கீட்டெல்லாம் கட்டிவைத்து, ஒழுங்கா யிருக்கவேண்டும்" என்று கண்டித்தார்; அன்றுமுதல் பாட்டுச்சொல்லித் தருவதையும் நிறுத்தினர் மாமா.

## 5 "சங்கீத சாமி"

வேங்கட சுப்பிரமணியம், அதைரியப்படவில்லை; அவர் காமாக்ஷியின் பரமபக்தர். அவளே உள்ளிருந்து தூண்டும்போது, யார் அவரைத் தடுக்க முடியும்? சாமா, நல்ல இசையரங்குகளில் வித்துவான்கள் பாடுவதை கேட்டும், சங்கீத சாஸ்திரங்களைப் பார்த்தும் ரகசியமாக நாத வித்தையை வளர்த்துக் காமாக்ஷியின் முன்பே பாடிவந்தார்; சில நாட்கள் நீண்டநேரம் ஸ்ரீ வித்யா உபாசனையும், ஜபமும் தியானமும் செய்து கோயிற் கதவுகளை யெல்லாம் தாழிட்டு விட்டு, அம்பிகை முன் மனமுருகிப் பாடுவார். அம்பிகை இந்த மேதாவியின் புலமையைத் தூண்ட, ஒரு துறவியைக் கொண்டுவந்தாள்!

காசியில் "சங்கீத சாமி" என்ற ஓர் ஆந்திரத் துறவி யிருந்தார். அவர் விசுவேசர் சந்நிதியில் ஆடிப்பாடி கானார்ச்சனம் செய்வது வழக்கம். அவர் இராமேச்வர யாத்திரைக்காகத் தெற்கே வந்து, சாதுர்மாச்யத்தில் தஞ்சாவூரில் தங்கினர். அவரைச் சாமாசாஸ்திரிகளின் தந்தை உபசரித்து, பிக்ஷை யளித்தார். இத் துறவி, அப்போது இளம் சாமாவைப் பார்த்தார்: "இவன் அதி மேதாவி; கான ஜோதி! இவனுக்கு நல்ல இசைப் பயிற்சி தரவேண்டும்" என்ருர். "சுவாமிகள் சித்தம் நடக்கட்டும்!" என்று தந்தை மகிழ்ந்து கூறினர்! முன்னே மாமா பொறுமை கொண்டு 'சாமாவின் பாட்டுக் குறிப்புகளைக் கிழித்

தெறிந்து வைததபோது நடந்ததை அவன் அப்பாவிடம் சொன்னான். அப்பா, "சாமா, உனக்குத்தான் சங்கீதம் எதற்கு? அது நமது குலத்தொழிலில்லையே; நீ வேதாகம சாஸ்திரங்களைத்தான் படிக்க வேண்டும்" என்றார். சங்கீதம் பயில்வது தாழ்வு என்பது அவர் எண்ணம். இப்போதோ, சுவாமிகளின் அருளால் அவர் மனம் மாறியது. "சாமா, சுவாமிகள் சொன்னபடி கேள்" என்று உத்தரவு அளித்தார் தந்தை. குடும்பக் கவலை யில்லை. தியாக திட்சிதாள் போல் சாஸ்திரிகள் வறிஞரல்லர்; பிதுரார்ஜிதமும், கோயில் வரும்படியும் ஏராளமாக உண்டு. ஆதலால் எக்கவலையு மின்றி வேங்கட சுப்பிரமணியம், சுவாமிகளிடம் நாதக்கலையே பயின்றார். சுவாமிகள் சங்கீதக் கலையில் இணையற்ற பெரும் புலவர்; பிறர் அறியாத அரிய பெரிய இசை நுட்பங்களை அவர் தமது சிஷ்யனுக்குப் புகட்டினார்; தாம் எழுதிய சில அரிய இசை நூல்களையும் சுவாமிகள் அவனுக்குப் பாடம் சொல்லி வைத்தார். குரு கிருபையினாலும், சிஷ்யன் கருத்தாலும் பாடம் விரைவாக ஏறியது. நான்கு மாதங்களில் வேங்கட சுப்பிரமணியம் சங்கீத நுட்பங்களை யெல்லாம் அறிந்தார். சுவாமிகள் புறப்படும்போது, தமது நூல்களை அன்புடன் அளித்து, "அன்பா, சங்கித சாஸ்திரத்தைக் கற்றாய்; இனி இந்த சமஸ்தான வித்துவான் ஆதியப்ப ஐயரின் இசை விருந்துகளைப் பருகி வா! ஆனால், அவரிடம் ஒன்றும் கற்காதே; கேள்விமட்டும் இருக்கட்டும். நீ உயர்ந்த நிலைக்கு வந்து கான ஜோதியாக விளங்குவாய்! அம்பாள் கடாக்ஷம் உனக்குப் பரிபூரணமா யிருக்கிறது" என்று ஆசிர்வதித்துச் சென்றார். மாணவர், குரு வாக்கைப் பரிபாலனம் செய்து வந்தார். சாஸ்திரிகள் செய்த ஸ்ரீ வித்யா உபாசனையும் பழுத்துப் பலனளிக்கத் தொடங்கியது.

## 6. ஆதியப்ப ஐயர்

பச்சிமிரியம் ஆதியப்பையா, "ஸ்ரீ வேங்கட ரமண" என்ற முத்திரையில் பல அரிய கீர்த்தனங்களைச் செய்தவர்; "விரிபோணி" என்ற புகழ் பெற்ற பைரவி அட தாள வர்ண கர்த்தர்; இராக தாள ஆலாபனை, லயம், கதி, கமக லக்ஷணங்களை ஆராய்ந்து சாஸ்திரம் செய்த வித்தகர். பல்லவி கோபாலையர், சஞ்சிவீஐயர்போன்றபெரிய இசை வாணர்கள் இவருக்குச் சிஷ்யர்கள். இவர் தஞ்சை பிரதாப சிங்க மன்னர் காலத்திலும் துளஜாஜி காலத்திலும் ஆஸ்தான வித்துவாஞ யிருந்து, இசை மாணிக்கமாக விளங்கினர். அவர், அருமை, பொருமை யில்லாத ரசிகர். மன்னர் இவரிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். இவர் மகன் வீணை கிருஷ்ணையரும், பெரிய புலவர்; சப்த தாளேஸ்வரம் என்ற லக்ஷண கிரந்தகர்த்தா. இவர் நமது வேங்கட சுப்பிரமணியனின் நண்பர். இருவரும் அடிக்கடி பாடுவதுண்டு. ஒருநாள் இவர்கள் பாட்டைக் கேட்ட சமஸ்தான வித்துவான், புதிய இளம் வித்துவானை மெச்சி, சோதனை செய்து, அடிக்கடி தம்மிடம் வரச்செய்தார். அவருக்கு ஐம்பது வயது; சாமா, பதினெட்டு வயது வாலிபர். இந்த வாலிபரின் மேதையை மதித்து அப் பெரியார், "காமாக்ஷிதானப்பா, இப்படி வந்திருக்கிருள்; உன் வாக்கில் பாடுகிருள்! நீ மகா வித்துவானப்பா!" என்று போற்றி மரியாதை காட்டினர். வேங்கட சுப்பிரமணியனை விட்டில், "ஸ்யாம கிருஷ்ணன்" என்று அழைப்பர். ஆதியப்பர், அவரைக் "காமாக்ஷி" என்றே அழைத்தார். காமாக்ஷி வந்து விட்டால், மற்ற சிஷ்யர்களுக்குக் கூட விடைகொடுத்துவிட்டு, இச்சிஷ்யனையே புலவர் கவனிப்பது வழக்கம். ஒருநாள் தாம்பூலப் பிரியரான காமாக்ஷி பேசியபோது, வாயிலிருந்த தாம்பூலத் துண்டு, ஆதியப்பர் சரிகை வேட்

டியில் தெரித்துவிட்டது. "ஆ! அபராதம்" என்று காமாக்ஷி பதறிப்போய், அதை அலம்பத் தண்ணீர் கொண்டுவர எழுந்தார். ஆதியப்பர் தடுத்து, "இது, காமாக்ஷி பிரசாதம்; இதற்கே காத்திருந்தேன்! அப்பனே இன்றே நிஜ சங்கீத மர்மம் அறிந்தேன்; உட்கார்" என்ருர். ஆதியப்பருக்கும் இளம் சாஸ்திரிகளின்மேல் அவ்வளவு பக்தி ஏற்பட்டது. சாஸ்திரிகளின் வித்தியா ஞானம் நிறைவுற்றதும், அவர் காமாக்ஷியம்மன்மேல் சுயம்பாடத் தொடங்கினர்!

## 7. கம்பீரமான ஆள்

சாமா சாஸ்திரிகள், வீர கம்பீர அழகர்; நல்ல உயரம், சரியான பருமன்; அழகான அங்க லட்சணம்; நெற்றியில் பளிச்சென்று துலங்கும் அம்பாள் குங்குமம்; காதில் பளபளவென்று மின்னும் வயிரக்கடுக்கன், கையில் மோதிரம், வெள்ளிப்பிடி போட்ட பிரம்பு, இடுப்பில் தூய வெண்மையான சரிகை வேஷ்டி. கழுத்தில் ருத்திராக்ஷ மாலே, மேலே பகட்டான சால்வை—இவற்றுடன் அவர் கந்தர்வ புருஷராக விளங்கினர்! அவரைக் கண்டவர் எழுந்து நின்று கும்பிடுவர். அவர் சித்த மெல்லாம் காமாக்ஷி பக்தியில் ஆழ்ந்திருந்தது. 'தாமுண்டு, அவளுண்டு, கலேயுண்டு!' என்றே அவர் சாதுவாக விளம்பர மில்லாமல் வாழ்ந்தார்! அவர், மாணவரைக் கூடத் தேட வில்லே. தாம் இயற்றிய 300 கிருதிகளேயும் தாமே பாடிக் கொண்டு அம்பாளுக்குக் கீதாஞ்சலி நடத்தினர்! கச்சேரி செய்து சம்பாதிக்கும் கவலேயும் அவருக்கில்லே; நல்ல சொத்து உண்டு. ஆதலால் தஞ்சாவூரில் இருந்தும், சமஸ்தானத்தின் தயவை அவர் நாடவில்லே. அரசருக்குப் பாட வில்லே, அம்பாளுக்கே பாடினர்! அவர் நீண்ட யாத்திரை

களும் செய்யவில்லை; தஞ்சாவூரிலேதான் பெரும்பாலும் வசித்தார். ஆனால் அடிக்கடி அவர் திருவையாறு சென்று, தியாகப் பிரமத்தைக் கண்டு, தமது கிருதிகளையும் அவரிடம் பாடிக்காட்டி, அவர் பாடல்களையும் கேட்டு மகிழ்வதுண்டு; இருவரும் நீண்டநேரம் சங்கீத விஷயமாகப்பேசுவதுண்டு. அவர் முத்துசாமி தீட்சிதரையும் கண்டு போற்றி, "ஸ்ரீ வித்யா மந்திர ரகசியங்கள்" உபதேசம் பெற்றதாகவும் சிலர் சொல்லுகிறார்கள்.

ஒரு தரம் அவர் புதுக்கோட்டை நவராத்திரி உற்சவத்திற்குச் சென்று, பிரகதம்பாளைப் பாடினார். பிறகு, மதுரைக்குச் சென்று மீனாம்பிகைக்கு "நவரத்ன மாலிகை" என்னும் ஒன்பது கீர்த்தனங்களைச் சூட்டினார். அவற்றுள், சங்கராபரண ராகத்தில் அமைத்த "சரோஜதள நேத்ரி" என்பது, புகழ் பெற்ற கீர்த்தனமாகும்.

## 8. கலை நயம்

சாமா சாஸ்திரி கிருதிகள், நிரம்பப் புலமை உடையவை. தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் அவர் செய்துள்ள கிருதிகளை, குரு மூலம் கற்று நீண்டகாலம் சாதனம் செய்தாலே, சரியாக இசைக்கலாம். சாமா சாஸ்திரிகளிடம் சிறிது பாடம்கேட்டு எல்லாந்தெரிந்துவிட்டதாக நினைத்த சிலர், தியாகராஜரிடம் பாடிக்காட்டினர். தியாகராஜர், "அமிர்தம் போன்ற சாமா வாக்கை, அறியாமல் பாடிக் கொலை பண்ணுகிறீர்களே; ராக தாள லயங்கள் கமகங்கள் பொருந்த நன்றாகப் பயின்றே, அவர் பாட்டைப் பாட வேண்டும்" என்றாராம்! சாமா சாஸ்திரிகள், ஆனந்த பைரவியிலும், சாவேரியிலும் அற்புதமான கீர்த்தனங்களைச் செய்தார். இந்த இரண்டு ராகங்களும் அவ

ருக்கு மிகவும் பிடித்தவை; மற்றமேள ராகங்களிலும், அபூர்வ ராகங்களிலும் பல கீர்த்தனங்கள் செய்தார். ஆனால் அவற்றை முறையாகச் சிடர்களுக்குப் பாடம் சொல்லி வைக்கவில்லை; அவற்றைப் பாடவும், நிரம்பப் புலமையும் கடினமான உழைப்பும் வேண்டும். அதனாலேதான் தியாகையர் கிருதிகள்போல், சாமா கிருதிகள் பரவவில்லை. "ஐயர் வாக்கு திராக்ஷா பாகம்; தீட்சிதர் வாக்கு நாளீகேரம்; சாஸ்திரியார் வாக்கு கதலீ பாகம்" என்பர் புலவர். அதை உரித்துச் சாப்பிடவேண்டும். அம்பிகை ஆவேசத்தாலேதான் அவர் பாடினார். ஆதலால், சித்த சுத்தியும் கலைத் தேர்ச்சியும் இருந்தாலே, சாமா சாஸ்திரிகள் பாட்டு எளிதாக வரும். சாதனம் செய்து பாடினாலோ, பாடப்பாட இன்பமளிக்கும் சாஸ்திரிகள் வாக்கு. "மரிவேரே கதி," "ஹிமாசல தனய" "ஓ ஜகதம்பா!" முதலிய ஆனந்த பைரவிக் கீர்த்தனங்கள், "சங்கரி சற்குரு," "துருசுகா" முதலிய சாவேரிப் பாடல்கள், "நின்னே நம்பினானு" (தோடி), "ப்ரோவ சமயமு" (புன்னாகவராளி), "நன்னுப்ரோவ" (லலிதா), "பாலிஞ்சு காமாக்ஷி" (மத்யமாவதி), "சரோஜதள நேத்ரி" (சங்கராபரணம்), "தேவிப்ரோவ சமயமிதே" (சிந்தாமணி), "தல்லிநின்னு நேர" (கல்யாணி) முதலிய கீர்த்தனங்களும், ஸ்வர ஜதிகளும், தாள வர்ணங்களும், "தாளப்ரஸ்தாரம்" என்ற இசை நூலும், சாமா சாஸ்திரிகள் நமக்கு வைத்துச் சென்ற அருங்கலைச் செல்வங்களாகும்.

## 9. வாக்குப் பலித்தது!

சாமா சாஸ்திரிகள், தேவி உபாசனையால் அருள் வாக்குடன் அருள் நோக்கும் பெற்றவர்; சோதிட மந்திர சாஸ்திர நிபுணர்; அவர் சொல்லும் குறிகளெல்லாம்

கணக்காயிருக்கும். முகத்தைப் பார்த்தே, குணத்தைச் சொல்லுவார்; ஆயுளை அறிவார். ஒருதரம் தமது நண்பர் ஒருவர் ஓடிவந்து, "சாஸ்திரிகளே, என் ஜாதகத்தை ஒரு ஜோசியர் பார்த்து, பத்துநாளில் நான் மாண்டு போவேன் என்ருர்" என அலறிஞர். சாஸ்திரிகள் உடனே நண்பரின் அம்ச சக்கரத்தையும், இராசியையும், முகத்தையும் பார்த்து, "நண்பா, நீ இன்னும் பத்தாண்டுகள் இருப் பாய்; உறுதி" என்ருர். அப்படியே நடந்தது! ஒரு நாள் ஒருவர் முகத்தைப் பார்த்து, "நீ எட்டே நாள்தான் உயிருடன் இருப்பாய்" என்ருர். அப்படியே எட்டாம் நாள்,ஆள் இறந்தான்! ஒருநாள் ஆதியப்பருடன் கடைவீதி யில் நடந்தபோது, ஒரு வாணக்கடைக்காரன் சாஸ்திரி களைக் கேலி செய்தான்; "காமாக்ஷி கோயில் அர்ச்சகன் தானே; இவன் என்ன வித்துவானே?" என்ருன். சாம்ப லாய்ப் போகிற காலம் வந்துவிட்டதா?" என்று சாஸ்திரி கள் சொல்லிச் சென்றதுமே, கடை தீப்பிடித்து வாணமும் சாம்பலானது; ஆளும் சாம்பலானுன்! இப்படிப் பல அதி சயங்கள் நடந்ததுண்டு.

## 10. பொப்பிலி கேசவையா

அனைத்திலும் அதிசயம், சாமாவின் அடக்கமே! சரபோஜி மகாராஜா காலத்தில், வித்துவான்களுக்கு நல்ல மதிப்பும் செழிப்பும் இருந்தது. ஏராளமான சன்மானங் கள் கிடைக்கும். மன்னன் கலைவள்ளல், ரசிகமணி; அது சுவாதித் திருநாள் காலம். சங்கீதத்திலும், பரத நாட்டியத்திலும், பல மொழிகளிலும் வல்ல சுவாதித் திருநாள் பத்மநாப பக்தி பரவசத்தால் 317 உருப்படிகள் பாடி, கான வித்தையை வளர்த்தார்; இசைப் புலவர்களை யெல்லாம் தக்கபடி ஆதரித்தார்; இவர் புகழைக் கேட்ட

சரபோஜி, தானும் பிரபல வித்துவான்களை ஆதரித்துக் கலை வளர்க்க ஆர்வங்கொண்டான்; பலர் வந்தனர். ஆனால் அந்த மும்மணிகள், தியாக, திட்சித, சாஸ்திரியார், அரசன் சன்மானத்தைத் துரும்பாக மதித்து ஒதுங்கியே வாழ்ந்தனர். தஞ்சாவூரிலிருந்தும், பலர் வேண்டியும் சாஸ்திரிகள் அரச சபையை எட்டிப் பார்க்கவில்லை. சிறிது விரும்பி யிருந்தாலும், ஆதியப்பர் சிபார்சினால் உயர்ந்த நிலை பெறலாம். ஆனால் பக்த சிகாமணிக்கு, அந்த இச்சையில்லை.

அக்காலம் பொப்பிலி கேசவையா, சங்கீதப்புலியாகக் கிளம்பி, வித்துவான்களை யெல்லாம் மிரட்டி வந்தார்; "நீயும் பாடு, நானும் பாடுகிறேன்; நீ தோற்றால், என் அடிமையாகவேண்டும்!" என்று விருப்புப் பேசிப் பல வித்துவான்களைப் பல்லவி தான வர்ணங்களில் வீழ்த்தி வெற்றி பெற்றார். "பூலோக சாபசுட்டி" (பூவுலகைப் பாயாகச் சுருட்டியவன்) என்று பட்டப் பெயரையும் தனக்குச் சூட்டிக்கொண்டு கேசவையா தஞ்சாவூர் ஜில்லா வுக்கு வந்தார். முதலில் அவர் தியாகராஜரைக் கண்டார்; சபதம் கூறினார். இருவரும் பாடினர்; தியாகராஜரே வென்றார்! கேசவையா தோல்வியுற்றுத் தஞ்சாவூருக்கு வந்து முரசடித்தார். உலகையே பாயாகச் சுருட்டக் கூடிய வித்துவானின் விருதுகளையும், பரிவாரங்களையும், பதக்கங்களையும், படாடோப பயங்கரங்களையும், தோடாக்களையும் பார்த்துத் தஞ்சாவூர் வித்துவான்கள் மதி கலங்கினர். சரபோஜிகூட, சாபசுட்டியின் கொடி கட்டிய பெரிய தம்பூராவைக்கண்டு திகைத்தான். சங்கீதத்தின் தாயகமான தஞ்சாவூரைவென்றால் உலகத்தையே வென்றது போலாகும் என்பது கேசவையாவின் நினைப்பு. தஞ்சாவூரின் பெருமையைக் காக்க சரபோஜி மன்னன்

சாமா சாஸ்திரிகளுக்குத் தூதனுப்பினான்; சாஸ்திரிகள் அரசர் சலுகையை நாடுவதில்லை; எனினும் ஊரின் பெருமையைக் காக்க எழுந்தார்! சாபசுட்டியும் தன் விருதுகளுடன் கம்பீரமாக வந்து சேர்ந்தான். இருவர் போட்டியையும் பார்க்க ஏராளமான ரசிகர்கள் கூடினர். சாமா சாஸ்திரிகள், காமாக்ஷியம்மனை நீண்டநேரம் உபாசித்து, "சிந்தாமணி" என்ற அதியபூர்வ ராகத்தில் "தேவிப் ரோவ, சமயமிதே!" என்ற கீர்த்தனம் பாடி, நிவேதித்து அம்மன் அனுக்கிரகம் பெற்று, அவள் குங்குமமே அணியாகப் பூண்டு, ராஜசபைக்கு எழுந்தருளினார். பெருத்த ஆரவாரங்களுடன் வித்துவான்கள் அவரை வரவேற்றனர்.

இரண்டு வித்துவான்களும் எதிரெதிரான பீடங்களில் அமர்ந்தனர். சாஸ்திரிகள் அம்பிகையைத் தியானித்துக்கொண்டே பொப்பிலி கேசவையாவின் உருட்டல்களைக் கேட்டார்; கேசவையா தமது சாமர்த்தியமெல்லாம் அமோகமாகக்காட்டி, சங்கதிகளையும் ரவைகளையும் தான தஹனச் சரக்குகளையும் அபாரமாக எடுத்து வீசினார்; சபையில் ஆச்சரியக்குறி தோன்றியது. பாடுமட்டும் பாடிப் பொப்பிலி நிறுத்தியதும், சாமா சாஸ்திரிகள், "இந்த தானா? இங்கா உன்னதா?" (இவ்வளவு தானா? இன்னும் உள்ளதா?) என்று கேட்டார்! தம்மை வியந்து தோல்வியை ஒப்புக்கொள்ள எதிர்பார்த்த பொப்பிலிக்கு இந்தக் கேள்வி, வெடிகுண்டு போலப்பட்டது! "தினிகி பைன பாடகலரா?" (இதற்குமேல் நீர் பாடமுடியுமோ?) என்று கேசவையா ஒரு புலிப்பார்வை பார்த்தார். சாமா சாஸ்திரிகள், "ஓம் காமாக்ஷி" என்று தம்புராவை மீட்டிக்கொண்டு கேசவையாவுக்குமேல் பலபடிகள் தான தஹன ராக ஸ்வர சஞ்சாரங்களைச் செய்து, சபையை

ஆனந்தக் களிப்புறச் செய்தார்! புதிய புதிய சங்கதிகளைப்போட்டு அபூர்வமான கலைத்திறனைக் காட்டிய சாமா சாஸ்திரிகள் கழுத்தில், சரபோஜிராஜா மாலை சூட்டினான்! கேசவையா முகம் சுருங்கி, அகம்சுருங்கி, அகங்காரம் தகர்ந்து, ஒரு கும்பிடுபோட்டு வெளியேறினார். பிறகு அவர் பெயரையே காணோம்! மன்னன் சாஸ்திரிகளை, "சமஸ்தான இசையைக் காத்த மகாவித்துவான்!" என்று மெச்சி, ஏராளமான சன்மானங்களைத் தந்து, விருதுகளுடன் மரியாதை செய்தனுப்பினான்! வித்துவான்களெல்லாரும் சங்கீத ராஜனுக்குப் புகழ் கூறினார்கள்! சாஸ்திரிகளோ, அனைத்தையும் காமாக்ஷிக்கே அர்ப்பணித்து, எப்போதும்போல் அவளுடைய தாசனாகவேயிருந்தார்!

## 11. அப்புக் குட்டி

அக்காலம் நாகபட்டினத்திலிருந்த அப்புக்குட்டி நட்டுவன் என்பவன், சங்கீதச் செருக்கு மிஞ்சி இசைப் புலவர்களைப் போட்டிக்கு இழுத்துத் தோற்கடித்து வந்தான். சாஸ்திரிகள், சொந்த விஷயமாக நாகை சென்றபோது அவரிடம் வித்துவான்கள் முறையிடவே, அப்புக் குட்டியை ஒரு கை பார்க்க முனைந்தார். அப்புக் குட்டி வெகு ராங்கியாக, "நான் தோற்றால் தம்பூராவைத் தந்து ஊரைவிட்டுப் போகிறேன்; நீர் தோற்றால், சந்நியாசம் வாங்கிக்கொள்ளவேண்டும்" என்றான். "சரி, வா" என்று சாமா சாஸ்திரிகள், நீலாயதாக்ஷி அம்மனைப் பாடி உபாசித்துச் சபைக்கு வந்தார். அப்புக் குட்டி தன் வித்தையெல்லாம் காட்டினான். அவனைச் சாஸ்திரிகள் ஐந்து நிமிஷத்தில் ஓர் அபூர்வ சங்கதி காட்டித் தூக்கியடித்தார்! "தோற்றேன், வணக்கம்!" என்று,

நட்டுவன் மைசூருக்கு ஓடிப்போனுன்; அங்கே அவன் சமஸ்தான வித்துவானுகப் புகழ் சிறந்தான். ஆனுல் அப்புக்குட்டி, சாஸ்திரிகளிடம் பெருமதிப்புவைத்து, அவர் கீர்த்தனங்களைப்பாடி, அரச சபை வியக்கச் செய்தான். சாஸ்திரிகளின் வரம்பெற்ற வாக்கையும், பக்தி பரவசத்தையும் அரசர் அவனுல் கேள்வியுற்று, அப்படிப்பட்ட மகானைத் தாம் தரிசிக்கவேண்டும் என்று அழைத்துவரச் சொன்னுர். 1826-ல் அப்புக்குட்டி தஞ்சாவூருக்கு வந்து சாமா சாஸ்திரிகளை வணங்கி, "மைசூர் மகாராஜா அழைக்கிருர். தங்களுக்குக் கனகாபிஷேகம் செய்யப் போகிருர்; தயை செய்து எழுந்தருள்க" என்று மன்ருடினுன். "அப்பனே, நான் அரசர் பரிசுகளை விரும்பவில்லை; காமாக்ஷி சேவையே இன்பம்! நான் அரசரின் கனகாபிஷேகத்தை விரும்பவில்லை; அம்பிகைக்குக் கானுபிஷேகம் செய்வதே என் விருப்பம்! மேலும் என் இறுதிக்காலம் வந்துவிட்டது; இனி நான் எந்த ஊருக்கும் போய் வரமுடியாது. காமாக்ஷி பாதமே, என் இடம்" என்று சாஸ்திரிகள் நயமாகச் சொல்லி ஆளை அனுப்பி விட்டார். சாஸ்திரிகள் புதுக்கோட்டை நவராத்திரிக்குச் சென்று பிரகதம்பாளைப் பாடியதுண்டு; மதுரைக்குச் சென்று மீனுக்ஷியையும் பாடினுர். எப்போதும் சக்தி சாம்ராஜ்ய வித்துவானுகவே அவர் அம்பிகை அருளில் வாழ்ந்தார்.

## 12. "செத்த ஆறுநாள்"

சாமா சாஸ்திரிகள் பத்தினி, மகா உத்தமி; கணவன் பணியே தவம் எனக்கொண்டு வாழ்ந்தவள்; கணவனுக்கு முன்னேயே மஞ்சளுங் குங்குமமுமாகத் தான் போக வேண்டும் என்று அவ்வம்மாள் அம்மனை வேண்டி-

வந்தாள். அப்படியே 1827-ஆம் ஆண்டு அந்த உத்தமி கணவனை வணங்கி, ஆசி பெற்று, அனுயாசமாக உயிர் பிரிந்து பத்தினி உலகிற்குச் சென்றுள்; உற்றுர் உறவினர் ஏராளமாகக் கூடித் துக்கம் விசாரித்தனர். அப்போது 64 வயதுடைய சாஸ்திரிகள் புன்னகையுடன், "சாக அஞ்சினுள்; செத்த ஆறுநாள்" என்று ஒரு சிலேடை பேசினுர்! மனைவி இறந்துபோக அஞ்சினுளாக்கும்" என்று பலர் நினைத்தனர். "செத்த ஆறு நாளுக்கு" யாரும் பொருள் காண முடியவில்லை. மனைவி இறந்த ஆருநாள், சாஸ்திரிகள் அம்பிகையைத் தியானித்து, "ஓம் ஸ்ரீ காமாக்ஷி, "ஓம் பரதேவி" என்ற சக்தி நாமங்களை உச்சரித்து, முழு நினைப்புடன் உடலை உதறி ஆவியானுர். பிறகே, அவருடைய வார்த்தை எல்லாருக்கும் புரிந்தது! சோதிடம் பார்த்து, தமது முடிவையறிந்த சாஸ்திரிகள், "நான் சாக இன்னும் அஞ்சே நாள்; மனைவி செத்த ஆரும் நாள், நானும் சாவேன்!" என்ற சோதிடம் பலித்தது! மகர மாதம், சுக்லதசமி யன்று, தஞ்சாவூர் முழுதும் சாமா சாஸ்திரிகளின் மறைவைக் கண்டு வருந்தியது! அவர் கிருதிகளை வித்துவான்கள் பாடிப் பாடி, "இப்படிப்பட்ட மகான் நம்மிடையே இருந்தாரே!" என்று பெருமை கொண்டனர். சாமா சாஸ்திரிகள், சங்கீத வடிவாக விளங்குகிறுர்!

## 13. சந்ததி

சாமா சாஸ்திரிகளின் மூத்த பிள்ளை, பஞ்சு சாஸ்திரிகள், கோயில் பூஜை செய்தார்; அவர் பேரன் நடேச சாஸ்திரிகளே இன்று காமாக்ஷி கோயில் அர்ச்சகராயிருக்கிறுர்; இவர், சாஸ்திரிகள் கிருதிகளைப் பாடிப் பரப்புகிறுர்; தாத்தாவின் சங்கீதப் பொக்கிஷங்களையும்

சேர்த்து வைத்திருக்கிறார். இவருடைய சகோதரர் அண்ணுசாமி சாஸ்திரி, சாமா சாஸ்திரிகளின் இரண்டாம் பிள்ளையான சுப்பராய சாஸ்திரிகளுக்குத் தெத்துப் பிள்ளையானர். சுப்பராய சாஸ்திரிகள், தமிழ், தெலுங்கு, சமுஸ்கிருதப் புலவர்; தந்தையிடமே சங்கீதம் கற்று, பிறகு தியாகராஜரிடம் பயின்று பெரிய வித்துவானுனர். தியாகராஜர் இவரது கீர்த்தனங்களையும் ஸ்வர ஜதிகளை யும் போற்றிப் புகழ்ந்து ஆசிர்வதித்தார். மதுரையில் இவர் மீனுக்ஷி அம்பிகை முன் தமது கிருதிகளை அரங் கேற்றினர்; இவர், தந்தையைப் போலவே காமாக்ஷி உபாசகர்; சோதிடம் வல்லவர். உடையார்பாளையம் ஜமீன்தார், இவரை மிக்க அன்புடன் மதித்து மரியாதை கள் செய்தார். இவர் ஒருநாள் 'தத்தம்' என்று அர்க்கியம் விட்டு, இரண்டு மணி நேரத்தில் உயிர் பிரியப் போவ தாகச் சொன்னர்! திரளான பக்தர்கள் வந்து கூடினர் கள். உடையார்பாளையம் ஜமீன்தார், "தங்கள் விருப்பம் என்ன? சொன்னல் நிறைவேற்றுவேன்!" என்ருர். "என் முதல் விருப்பம், அம்பிகை கிருபை! கடைசி விருப்பமும் அம்பிகை கிருபை!" என்று மகான் உயிர்நீத்தார்! "ஜனநீ நினுவின" (ரீதிகௌளை), "வனஜாஸன" (ஸ்ரீராகம்), "நினுவினுகதி" (கல்யாணி) முதலிய பல கிருதிகள், இவர் பெயரால் "குமரன்" என்ற முத்திரையுடன் விளங்குகின்றன. இவர் தமது தெத்துப்பிள்ளை அண்ணு சாமி சாஸ்திரி, மாப்பிள்ளை காஞ்சி சாஸ்திரி, ராகவா சாருலு, பொன்னையா முதலிய பலருக்கு சிக்ஷை சொல்லிவைத்தார். அண்ணுசாமி, வீணை குப்பையரின் நண்பர். இவர் வயிலின் வாசிப்பில் சிறந்த நிபுணர்; லக்ஷண வித்துவான்; பல கிருதிகளையும் வர்ணங்களையும் செய்தவர். இவர் சிஷ்யரான மேளக்காரக் கோவிந்தனே

சரப சாஸ்திரிகளின் குரு; இவரிடம் கற்ற தஞ்சாவூர் காமாக்ஷியே, வீணை தனம்மாளுக்குச் சிக்ஷை சொல்லி வைத்தவள். இவர் 1900-ஆம் ஆண்டு இறந்தார்; இவர் மகன் சாமா சாஸ்திரிகள், வயலின் வித்துவானாயிருந்து சமீபத்தில் காலஞ்சென்றார்.

சாமா சாஸ்திரிகளின் சிஷ்யர்களில் சுப்பராய சாஸ்திரிகளைப் பற்றிச் சொன்னோம். அலசூர் கிருஷ்ணையா என்பவர், மைசூர் சமஸ்தான வித்துவானானார். தாசரி என்பவர் நாதஸ்வர வித்துவானாகி, தியாகராஜரின் அன்பையும் ஆசியையும் நன்மதிப்பையும் பெற்றுத் திருவையாற்றில் பஞ்சநத ஸ்வாமிக்குச் சேவை செய்தார். ஒரு தரம் "தாரினி தெலுசு கொண்டி" என்ற சுத்த சாவேரிக் கீர்த்தனத்தை இவர் வாசிக்கக் கேட்டு, தியாகராஜர் பரவசங்கொண்டு, இவரைத் தழுவி ஆசிர்வதித்தாராம்!

மகாவைத்திநாத ஐயர், பட்டணம் சுப்பிரமணிய ஐயர், இராமநாதபுரம் ஸ்ரீநிவாச ஐயங்கார், வீணை சேஷண்ணா, வேங்கட ரமண தாஸ், சரப சாஸ்திரிகள் ஆகிய மகாவித்துவான்கள் அனைவரும் தியாகராஜ கீர்த்தனங்களைப் போலவே, முத்துசாமி தீட்சிதர் கீர்த்தனங்களையும், சாமா சாஸ்திரிகளின் அருட்பாடல்களையும் கச்சேரிகளில் பாடிப் பிரசாரம் செய்தனர். ஆனால், சாமா சாஸ்திரிகள் கிருதிகள் முன்னூறும் இப்போது நமக்குக்கிடைக்கவில்லை; அபூர்வமாகச் சில வித்துவான்கள் வாக்கில் தவழ்கின்றன. இனி அவற்றைத் திரட்டி அச்சிட்டுப் பரப்பச் சங்கீதாபிமானிகள் முன் வரவேண்டும்.

மகான்கள் வைத்துச் சென்ற நாதச் செல்வத்தை நாம் பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர்கள் பக்தி நமது உள்ளத்தில் துடிக்கட்டும். அவர்களுடைய

நாத வீணை, நமது இதயத் தந்திகளில் முழங்கட்டும். அவர்களுடைய திவ்ய நாம சங்கீர்த்தனம் நமது வாக்கில் தவழ்ந்து மனித வாழ்வைப் புனிதமாக்கட்டும். பாரதநாடு எதை யிழந்தாலும், கலைச் சிறப்பை இன்னும் இழக்க வில்லை; அதைக் கருத்துடன் காப்போம்!

## 14. கீர்த்தனமிர்த சாரம்

ஸ்ரீ சாமா சாஸ்திரிகளின் கீர்த்தனங்களில், அவர் காமாக்ஷி, நீலாயதாக்ஷி, மீனாக்ஷி என்னும் சிவசக்திகளை உபாசித்த இசை மலர்களே அடங்கியுள்ளன; அவற்றில் சில கீர்த்தனங்களின் கருத்துக்களை, இங்கே தேர்ந்தெடுத் தளிப்போம். இவையே, சாஸ்திரிகளின் உபதேச சாரமு மாகும்.

1. தீனரக்ஷகி, காமாக்ஷி, என்னைக் கைவிடாதே; காத்தருள்! நின் திருநாம ஜபமின்றி, வேறு மந்திரம், தந்திரம், யோகமார்க்கம் ஒன்றும் அறியேன். ஏ சிவசங்கரி, சூலினி! என் வாழ்வில் புத்தொளி காட்டும் மதியினை வளர்; நின்னை அடையவே தவஞ் செய்கிறேன். அன்பினும் சிறந்த தவமில்லை. ("ப்ரோவ வம்ம").

2. ஏ, பர்வத குமாரி, உமையாம்பிகே, நான் உன்னையே நம்பியுள்ளேன்! நீ பராமுகமா யிருப்பதேன்? எனது நெஞ்சின் ஆவல் அறிந்து, அருள்

கூட்டி, எனக்கு ஆண்மையும் வீரமும் ஊட்டு வாயாக! உலகில் கொடும் பாவம் பிணி பசி யாவையும் நீக்கி, அடியவரைக் காத்து, அருள் சுரப்பாயாக! அம்பிகையே, என் முறையீடு உனக்குக் கேட்கவில்லையா? ("ஹிமாசலதனய").

3. தாயே, ஸ்ரீ மீனுக்ஷி! செந்தாமரைக் கண்ணி, ஹிமவான் மகளே! நீ கருணைக் கடல்; சாமகான ப்ரியை; எனக்கு நீயே கதி! நீ என தாவியில் இணைந்து நில்; இதயத்தில் துடி; என் அற்பக் கவலைகளைப் போக்கு. வையந் தழைக்க வந்த வளே! நான் நினதருளில் உய்யக் கருணைசெய்! ("ஸரோஜதள நேத்ரி").

4. தாயே, மீனும்பிகே! உன் திருவடிப் பேற்றை அடையவேண்டும் என்பதே எனது தாகம்; அதைத் தணித்தருள்புரிவாயாக! உலகின் சோக மோகங்களில் பட்டுழலாது, என்னைக் காப் பாற்று; உன்னைச் சரண்புகுந்தேன்!

5. ஸர்வேச்வரி, இருளில் வழி காணுமல் ஏங்குகின் றேன். கவலையை விட்டு என்னைக் கரையேற்று வாயாக! நீ காட்டும் சன்மார்க்கமே எனக்கு நன் மார்க்கம். தாயே! நீ விட்ட வழியே நடக்கி றேன். என் வாழ்வில் நின் திருவருள் சுரந்து மங்கல வாழ்வு பொலிக!

6. எங் தாயே! உனது திருவிளையாடல்கள் அனந்த மானவை. அத்தனையும் அளவிட்டு அறிந்து கூற எளியேனால் முடியுமா? ஜகன்மோகினி! என்னைக் கைவிடாதே; நீ என்னை கூவி யழைத்து இன்பங் கொடுத்தால், அது குறை வென்று எண்ணுகிருயா? தாயே, என் அறிவிற் கலந்து அறிவாய் நின்று திருவருள் புரிவாயாக!

7. தாயே காமாக்ஷி, ஏக நாயகி! உன்னை நாடினேன்; உன்னருள் ததும்பும் தூவெளி தன்னை நாடினேன்; பொன்னை மாதரைப் பூமியை நாடேன்; என்னை நாடுவாய், என்னுயிர்த் தேவியே!

8. மீனாக்ஷி, நான் இதுகாறும் பெருமைக்கே இறு மாந்து பிதற்றி அலைந்தலைந்து பாவியானேன்; இனியேனும், சதா உன்னை நான் பாடித் துதித்துப் பரவசமாக வேண்டும். உன் புகழைப் பாடும் பேறு எனக்கு வேண்டும். கல்வியும் போதமும் பொய்யிலா அகமும் வாய்மையும் அன்பும் தந்தருள். தாயே! உன்னைச் சேர்ந்தவர் உய்வதுறுதி.

9. காமாக்ஷி, தருமாம்பிகே, எப்பொழுது நான் இப் பிறவியாகிய துன்பக்கடலை விட்டகன்று, நின் இன்பக் கடலாடுவேன்! இரவு பகல் தோற்ருமல் நான் நின் அன்பில் கரைந்து கரைந் துருகுவதைக் காணவில்லையோ? ஸர்

வேச்வரி, நான் வஞ்சனையும் அழுக்காறும் நிறைந்தவன் என்று எண்ணுகிருயா? அவ்வா றெண்ணுதே! அஞ்சலிக் கையும், அருவி நீர் விழியுமாக உன் அடிமலர்த் தஞ்சம் புகுந் தேன்; தயவுடன் காப்பது உன் பரம்!

10. நயனவேல் நாயகி! என்னை மறக்க நான் உன்னை நினைத்தேன், ஆடினேன், பாடினேன்! மன மிரங்கி இன்னருள் புரி. நீ இன்ப வாரிதி; அற்றவர்க்கு அருத நட்புடையாள். நான், யானெனதற்று, என்றும் நின் திருவடிபற்றி வாழவருள்! ஓம் சக்தி, ஓம்!

## 15. சாமா வாணி

இராகம்: கௌளிபந்து] [சாபு தாளம்

பல்லவி

தருணம் ஈதம்மா என்னை ரக்ஷிக்க! (தரு)

அநுபல்லவி

கருணை நிதியாகிய காமாக்ஷி ரக்ஷிக்கத் (தரு)

சரணம்

அனுதினமும் எந்தன் வாக்கில் உன் நாமம்
அதுவல்லால் மற்றொன்றும் இல்லை என் நேமம்!
மனக்கவலையைத் தீர்க்க மறு தெய்வம் உன்னைப் பார்க்க
எனக்குண்டோ? உனக்கேற்க இரங்கி உன் கண் பார்க்கத்
(தரு)

ஆதி சக்தி என்று பேர் எடுத்தாயே!
அகிலமும் வர்த்திக்க அவதரித்தாயே!
சாதகம் போல் உன்னைச் சரணம் என்றேன், என்னை
ஆதரிக்கப் பின்னை யார் உண்டு சொல், அன்னை (தரு)

காமித பலத்தைக் கைமேல் தருவாயே,
கண்பார்த்து ரக்ஷிப்ப தெப்போதும் நீயே!
சோமசேகரர் பாதி! சுந்தரி! கௌமாரி!
ச்யாமகிருஷ்ண சோதரி! சைலராஜ குமாரி! (தரு)

கான ஜோதி வாழ்க!



